உ

சிவமயம்.

ஸ்ரீ தியாகராஜசுவாமி துணை.

# சப்தபதிகப்பா.



காரைக்குடியில் வசிக்கும்

நேமங்கோவில்

அரு. அ. அரு.

இராமசாமிச் செட்டியாரவர்கள்

குமாரன்

அருணாசலச் செட்டியா

இயற்றப்பெற்றது



இரங்கோன்

மெர்க்கன்டயில் பிரின்டிங் ஒர்[illegible]

என்னும் அச்சேந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

1910

உ

சிவமயம்.

# சூசி பத்திரம்.



இவை அடங்கியுள்ளன.






உ

சிவமயம்.

வேலுமயிலுந் துணை.

வலயமாநகர்

# மலையாண்டி விநாயகர் பதிகம்.

## காப்பு வெண்பா.



கன்னன் மொழிசேர் கலைமகளும் [illegible]ளும்
மன்னி வளர்வலய மாநக[illegible] — [illegible]லை
யாண்டிபதி கம்மதனைப் பாப்புகல வந்தமலை
யாண்டிபதமே துணையாம்.

## நூல்.

கலைமாது பணிகின்ற மலைமாது பெறுமைவங்
கரத்தனே கடவுளர்க்காக்
கயமுகனே யடுசமரின் மடியவெதிர் கணேசனே
கருணைமழை பொழியுமுகிலே
சிலைதனைச் சிலையெனக் கொண்டசிவ னுதவவரு
சேயனே நால்வாயனே

சேவலங் கொடியுடைய கோவனை யழைக்கத்
தினைப்புனஞ் சூழ்ந்தி ருக்கும்
மலைமேவு சுனையோரம் மதமிகுங் கரியதாய்
வந்தங்கு வள்ளி யென்னும்
மாதவன் றோள்சார மணமுடித் தருள்செயும்
மாவதன மிலகு மணியே
பலகலைக ளறியாத சிறியனே னென்னினும்
பக்ஷம்வைத் தாளு மளகா
பதியைநிகர் நவமணிக ணிதிகளுறும் வலயமா
பதியில்வளர் மலையாண் டியே. (க)

கையாறே டாறுடைய வையனின் சோதரா
கங்காள னுமையி னோடு
கவறுவிளை யாடையின் மனைவியவள் வென்றிடக்
கண்டுநகை செய்த ருகினில்
ஒய்யார மாயுறுந் தேவிநீ தோற்றையென்
றோதவவள் தானு மிங்கே
யுளவரை வினவினுல் நன்றுய்வி ளங்குமென
வுன தண்ணை னக்கே ளெனப்
பொய்யாது சொல்லென்ன மாயவன் சூதுடைப்
போர்பரமன் வென்றா னெனப்

புவனங்க ளின்றிடுங் கன்னியவ் வண்ணனைப்
பொங்கரவ மாவா யெனப்
பையரவ மாகிவரு மாமனைக் காத்தருள்செய்
பாலவெண்ணெ யாளு மளகா
பதியைங்கர் நவமணிக ளிதிகளுறும் வலயமா
பதியில்வளர் மலையாண் டியே. (உ

கோடானு கோடிபேர்க் கஞ்சாத வசுரனைக்
கோட்டினாற் கொன்ற முதலே
குவலயமெ லாந்தொழு மாதியே சோதியே
குஞ்சரமு கத்தை யனே
தேடாது தேடுவார் தேட்டற்ற தேட்டமே
தேடரிய ஞான மணியே
சித்தம்வைத் தாளென்று நித்தநித் தம்வந்து
திருவடியி லலறி வீழ்ந்து
வாடாது வாடுமென் முகவாட்ட முங்கண்டு
வாடாம லிருவென் னநீ
மாசற்ற கருணையோ டருள்செயா தின்னமும்
வாளாவி ருப்ப தழகோ
பாடான பாடுகள் படவுமுடி யாதினிப்
பக்ஷம்வைத் தருள்செ யளகா

பதியைநிகர் நவமணிக ணிதிகளுறும் வலயமா
பதியில்வளர் மலையாண் டியே. (௩)

பணிசெய்து வருவிபீ டணன்லங்கை யேகுநாட்
பார்த்திரா மன்க ழல்களைப்
பணிந்தைய னினதுபிரி வாற்றலே னென்னவப்
பரமனருள் திருவ டியினை
மணிவைத் திழைத்திட்ட முடிதாங்கு முடிமீது
வைத்துவரு வழிய தனிலே
வானுட ரிறையேவ மறையோது சிறுவனும்
வரவினைக் கண்டன் னவன்
தனிவோடு போற்றியது பூமிமிசை வையாது
சற்றுநில் லென்ன வாங்கித்
தரணியிற் சீரங்க மாகவைத் தன்னேன்
றனக்கருள்செய் தாளு முகலே
பணிகளணி பரமனுமை யுதவவரு பாலனே
பாலனெனை யாளுமளகா
பதியைநிகர் நவமணிக ணிதிகளுறும் வலயமா
பதியில்வளர் மலையாண் டியே. (௪)

நீர்க்குமிழி யனையபொய் யுடலைநான் நிலையாக
நிற்குமென மின்னார் களின்

நேயமே யின்பமென வவர்களூறும் வீடுகள்
நித்யசா யுச்சிய மென்ன
யார்க்குமற மென்றுமொரு காசளவு மீயாம
லன்னார்த மக்க ளித்தும்
அம்மாத ராசையாங் கடலுட் டுரும்பென
வழுங்கிக் கிடந்து மூன்ற
மூர்க்கனே னென்றாலு முன்பெருமை பெரியோர்
மொழிந்திடச் சிறிது கேட்டு
மோகமொடு சோகங்க டீர்த்துமெஞ் ஞானமிகு
முத்தமிழு மருள்வை யென்றே
பார்க்குளோ டித்தேடி யிவண்வந்து நின்றனன்
பாலனெற் கருள்செ யளகா
பதியைநிகர் நவமணிக ணிதிகளூறும் வலயமா
பதியில்வளர் மலையாண் டியே. (ரு

சிவஞான நமதைய னுதலினிற் றோன்றியெத்
திசையினும் விளையாடு காற்
றேவரிந் திரனோடு மமர்செய்து யாழ்வலோன்
செப்பவவர் தம்மை யாண்டிவ்
வவனியைத் தருமயனை யோமெனும் பொருள்வினவி
யரியசிறை தன்னில் வைத்தன்

றதனைப் படைக்கநம் மையன்வேண் டிடுதலா
　　லவ்வயன் சிறையை நீக்கி
நவவீரர் கணநாதர் லெக்ஷரொடு நந்திதொழ
　　நற்கையிலே வீற்றி ருந்து
நாரதன் வேள்விவரு தகரேறி யுறுசாமி
　　நாதனின் றமைய வெனது
பவமெலாம் போக்கியிப் போதருள் புரிந்திடப்
　　பாடுகவி கேட்கு மளகா
பதியைநிகர் நவமணிக ளிதிகளுறும் வலயமா
　　பதியில்வளர் மலையாண் டியே. (௬

மெச்சுநற் டச்சைமயி லேறியக் கயிலையொடு
　　விண்ணெட்டு மாதி ரத்தை
வேகமொடு முருகவேள் சுற்றிவரு முன்னதாய்
　　விமலனைச் சுற்றி வந்தங்
கிச்சையுடன் மாங்கனியை வாங்கிமுன் தின்றவா
　　இமயமலை யீன் றெடுத்த
வெழிலான மகவாகி நந்தந்தை தனைநாடி
　　யியல்பான தவமியற்றி
நச்சைமுன் னுண்டவப் பரனைமண மாலையிடு
　　நாரிசிவை பார்ப்பதி யுமை

நாரணிகல் யாணிதிரி சூலிகங் காளிபரை
ஞாலங்க ளீன் றெடுத்த
பச்சைமயி லாங்கன்னி யிச்சையுட னுதவவரு
பாலவெனை யாளு மளகா
பதியைநிகர் நவமணிக ணிதிகளுறும் வலயமா
பதியில்வளர் மலையாண் டியே. (எ)

பொய்திகழும் வார்த்தையோ டேர்க்கெலா மேற்காத
புரட்டினைச் செய்ய வெண்ணும்
போகாத விடமெலாம் போகவே யெண்ணுமிப்
புவியெலா மாள வெண்ணும்
மெய்திகழும் வார்த்தை சொல வெண்ணிடுஞ் சிலசம
மேலான மோக்ஷ வீட்டை [யம்
வேண்டிடுஞ் சிலசமயம் மேலவர்க ளுறவினை
விரும்புமயில் போலும் விழியில்
மைதிகழு மாதர்புகழ் பேசிமகிழ் கொண்டிடு
மறந்தவர் தமைப் பழிக்கும்
மதியைவிட் டொருவழியில் நிற்கின்ற பரிசுத்த
மதியினைத் தந்தா ளுவாய்
பைதிகழும் விடவரவை யணிபரம னுதவவரு
பாலனே செல்வ வளகா

பதியைநிகர் நவமணிக ளிதிகளுறும் வலயமா
பதியில்வளர் மலையாண் டியே. (அ)

காலொத்த வேகமொடு சென்றுலக மெங்குங்
கலக்கமது செய்ய சுரனைக்
கடவுள்சக் கரமதனி னூற்கொன்று வருதலைக்
கண்டுமா லங்க வன்றான்
போலொத்த வுருவெடுத் தன்னவன் றேவியைப்
புணரவவள் கண்டு பூவிற்
போய்ராம னெகென் றிறந்திடச் சுடலையிற்
போய்மாய வன்புர ளவே
சேலொத்த விழியுமையள் கண்டுவிதை யொன்றினைத்
திருத்துளவ மாவா யெனச்
செப்பியே போடவத் துளவமே தணிந்துமய
றீர்ந்ததிரு மாலின் மருகா
பாலொத்த மொழிகௌரி தருபால வென்மீது
பக்ஷம்வைத் தாளு மளகா
பதியைநிகர் நவமணிக ளிதிகளுறும் வலயமா
பதியில்வளர் மலையாண் டியே (கூ)

மதியுற்ற நதியுற்ற மணியுற்ற விடமுற்ற
மாபணிக டாமு முற்ற

மலருற்றவ் வழகுற்ற சடையுற்ற பரமற்கு
    மைந்தனென வந்துல கிலே
துதியுற்று வாழ்கின்ற தோன்றலே புலவோர்க
    டொழுதிடக் கருணை செய்யுந்
துய்யனே கிரிமேவு மையனே பெற்கருள்செய்
    சுகுணனே மணிமுத் தமா
நதியுற்ற நாட்டினில் வளமிக்க நிலமுற்ற
    நகரங்க டன்னி லென்றும்
நாடியற மேசெய்யு நகரமென வானோரும்
    ஞாலமிசை யெய்த வளமாம்
பதியுற்ற தனவணிகர் குலமொக்க வாழ்வுறப்
    பக்ஷம் வைத் தாளு மளகா
பதியைநிகர் நவமணிக ணிதிகளுறும் வலயமா
    பதியில்வளர் மலையாண் டியே (ம)

மலையாண்டிப்பதிகம் முற்றிற்று.



சிவமயம்.

வேலுமயிலுந்துணை.

திருவாரூர்த்

# தியாகேசர் பதிகம்.



## காப்பு.

பூவுலகுந் தேவுலகும் போற்றுதிரு வாரூரின்
மேவுந்தி யாகேசர் மீதினிய—பாவியம்பக்
கூற்றையுதைத் தோனடியர் கொண்டுவந்த பொன்னினது
மாற்றையுரைத் தோயருள வா.

## நூல்.

பொன்னுலகின் வாழ்பவர்க் கின்னல்செய் தொழுகலே
பூணெனக் கொள்ளு மசுர
பூபனைக் கொன் றவரு முசுகுந்த னுன்னைபரி
பூசனைசெயக் கண்டு மா
மன்னனிட முன்றனைப் போலாறு தியாகரை
வாங்கியொரு நாளதனிலே

வான்மியூர் நள்ளாறு காராய லொற்றியூர்
மாமறைக் காடு நாகை
யென்னுந் தலங்களில் வைத்தவன் வணங்கநா
மிலையென்றவ் வேந்த லுக்கே
யெழில் மிகுஞ் செங்குவளை யுண்டென்று சொன்ன
வியல்பது தெரிந்து வாங்கிச் [வவ்
செந்நெல்விளை யாரூரில் வைத்தவன் வணங்கவருள்
செய்தேவ வெனையா ளுவாய்
செங்குவளை கொன்றைநதி திங்களர வங்கள்புனை
செஞ்சடைத் தியா கேசனே. (க)

முருகோடு புழுகோடு பணியோடு பிரியாத
முலைமாத ராசை யென்னும்
மோகந்த விர்த்தவர் தமக்குநா முதன்மையுறு
முத்தியை யளிப்ப மென்றே
யொருகோடி மறைகளுரை செய்திட்ட பரமனே
யோரிரவி லன்ப னுக்கா
யுனதுபத மலர்நோவ வேகியப் பரவையி
னூடறீர்த் தவர் தமக்குப்
பொருளோடு புணியோடு முத்தியை யளித்திட்ட
போதனே கால காலா

புருகூதன் மாலயன் வேதங்கள் காணுத
புண்ணியா வெற்கருள் செய்வாய்
தெருவீதி தனின்மாத ரெழிகளப மணநாறு
திருவாரூர் மேவு முதலே
செங்குவளை கொன்றைமதி திங்களர வங்கள்புனை
செஞ்சடைத் தியா கேசனே. (உ

சிந்துர்த்தனைபதங் கவிபாடி யாடிடுஞ்
சிறுமியர்கள் வீடு சென்று
செப்பனைய முலைமாதர் செப்பிடும் வார்த்தையைச்
சென்னியிற் கொண்டு நித்தம்
மந்தமதி கொண்டவர்க டந்தமயல் பூண்டுற்ற
மாபாவி யென்னினுந் தான்
மாசற்ற பெரியோர்க ளே சுற்ற தன்லமையால்
வந்துனைய டுக்கலுற் றேன்
பந்தனைய கொங்கை யொடுகொந்தளக பாரமுறு
பாவையர்க ளாசை யென்னும்
பாழான படுகுழியில் வீழாம லென்றனைப்
பக்ஷம்வைத் தாளு மையா
சிந்தைதனி லன்போடு முன்றனடி தொழுமடியர்
திகழாரூர் மேவு மரசே

செங்குவளை கொன்றைநதி திங்களர வங்கள்புனை
செஞ்சடைத் தியா கேசனே. (கூ)

பெருமங்க லந்தன்னி லடியார்க ளடியினைப்
பேணியே வாழ்கின்ற நற்
பெற்றியுறு மேயர்கோன் கலிக்காம நாயனார்
பின்னுநகா விரவி னுன்னை
மருமங்க லம்புனை செய்திகேட் டேனுறம்
மனைவியிட மேக வைத்த
வன்றொண்ட னும்மடிய னவனோ வெனமனம்
வைக்கவச் செயறெ ரிந்தங்
கிருமங்க லஞ்செய்த வாரூர னெனுமவள்ள
லேவலே சூலை நோயா
லிருவரையு நண்புகொண் டுறவைத்த மாசிலா
வின்பப் பெருக் கமுதமே
திருமங்க லங்கள்மிகு திருவாரூர் தனின்மேவு
தேவனே யெனையாளு வாய்
செங்குவளை கொன்றைநதி திங்களர வங்கள்புனை
செஞ்சடைத் தியா கேசனே. (௯)

எந்தையே யிந்தவுல கந்தனைத் தந்தவனே
யென்குறைக ளோத விலையோ

யெடுத்தெடுத் திபமுகவ னென்றுயா நின்னிடையி
யம்பவிலே யோறுத லினில்
வந்தமுரு கேசனு னேர்கிட்ட விதமாறு
வாய்திறந் தோத விலேயோ
வானவர்க ளரிவைர வன்விர பத்திரன்
மாலயன் சொல்ல விலேயோ
மைந்தனு னல்லவோ தந்தைநீ யல்லேயோ
வாளாவி ருப்ப தென்னே
மைந்தனுக் கருள்செயாத் தந்தையென் றுந்தனே
வானுலக மேசி டாதோ
சிந்தைவைத் துன்றனரு டந்தென்னே யாளுவை
திருவாரூர் மேவு மரசே
செங்குவளே கொன்றைநதி திங்களர வங்கள்புனே
செஞ்சடைத் தியாகே சனே. (ரு)

ஏகசக் கரமதனி லுலக மாண்டுவரு
மிறைவன்மக னோர்தி னத்தி
லேரதமிசை யேறிவர வனேயினேத் தேடியங்
கிச்சையொடு கன்று தானும்
வேகமொடும் வரவந்த விளவலிர தங்கன்றின்
மேலேறி மாய வாவும்

மிகநொந்து மசையாத மணியினை யசைக்கவவ்
வேந்துகேட் டச்ச முற்றுச்
சோகமொடு மோடோடி வந்துபசு நின்றிடுந்
துயரது தெரிந்து மகன்மேல்
சுற்றிவரு தேரோட்ட வன்றுயிர் கொடுத்தாண்ட
தூயனே யென்னை யாள்வாய்
தேகிகட் கருள்செயும் ராஜாதி ராஜனே
திருவாரூர் மேவு முதலே
செங்குவளை கொன்றைநதி திங்களர வங்கள்புனை
செஞ்சடைத் தியா கேசனே. (௬)

தருமங்கை விட்டுநற் குருமங்கை யைக்கூடு
சந்திரற் கருள்செய் துதன்
றலைதனிற் புனைபரம திரிபுரரை யெரிசெய்த
சாமிவரை யரசன் மேனை
தருமங்கை தனைமணம் புரியக்க ணுவுலகு
தாளுண்ட சூர பதுமன்
றன்னோடு மரிமுகன் வரையோடு தாருகன்
றமர்களொடு சமரத னிலே
பொருமங்கை வேல்கொண்டு விண்ணவரை யாண்ட
புதல்வனைப் பெற்ற முதலே [தொரு

புத்தமுத மொத்தமொழி யுற்றுலகின் வித்தையருள்
பொற்கொடியி னோடு நாளுந்
திருமங்கை குடியுற்ற திருவாரூர் தனின்மேவு
தேவனே யெனை யாளுவாய்
செங்குவளை கொன்றைநதி திங்களர வங்கள்புனை
செஞ்சடைத் தியாகேசனே. (எ)

அரவிந்த மலர்மேவு கமலாலயந் தன்னி
லன்போ டிறங்கி நித்த
மாழமுற வெட்டிமணல் கல்லெடுத் திடுதொழிலி
லமர்தண்டி யடிகளைக்கூ உய்ச்
சிரமொடு பொட்டையா வெட்டாதே யுயிர்களுஞ்
சேதமுறு மென்று சமணர்
செப்பவவ ருக்கணய னங்கள்கெட் டென்கண்க
டெரியிலென் செய்வீரென
விரைவினொடு மிந்நகரை விட்டேகு வோமென
விளம்புமச் சமண ருக்கு
விழிகள்கெட் டிடவுமிவர் விழிகளுற் றவர்தமை
விரட்டவருள் செய்த முதலே
திரவியக் குவியல்மிகு திருவாரூர் தனின்மேவு
தேவவெற் கருள்செய் குவாய்

செங்குவளை கொன்றைநதி திங்களர வங்கள்புனை
செஞ்சடைத் தியா கேசனே. (அ)

நன்றிபுரி கின்றவர்க ளொன்றுமுற வின்றெனினு
நன்றியே புரிவ ரென்று
நாதனே வேதத்தி லோதியிப் போதெனது
நாட்டமரு வாத தென்னே
கன்றினுக் கீன்றபசு நன்றிபுரி கின்றதைக்
காதினுற் கேட்ட திலையோ
கடையனே னென்மீது படையெடுத் தொருநாலு
கணையைவேள் விட்ட தாலே.
வென்றிடவு மன்றிநான் கன்றிமன தொன்றியே
மிகவாடி நொந்த டைந்தேன்
வேதன்முன் றாதேவ வோதவரு வேளைநுதல்
விழியாலெ ரித்த பரனே
சென்றிடச் சொல்லிவேள் கலகத்தை நீக்கியாள்
திருவாரூர் மேவு மரசே
செங்குவளை கொன்றைநதி திங்களர வங்கள்புனை
செஞ்சடைத் தியா கேசனே. (கூ)

நாராய ணன்னிதம் பூசைபுரி சச்சிதா
நந்தநமி நந்தி யடிகள்

நாடோறு முனதுசந் நிதிவிளக் கேற்றிவரு
நாடன்னி லோர்தி னத்தில்
ஏராள மானநெய் வேண்டியறி யாதமனை
ரில்லடுத் திங்கு பசுவின்
னிழுதுறிற் கொடுமெடிக வாலயத்-திருவிளக்
கேற்றவென வக்கொடி யவர்
தாராள மாகவே நாரம்விட் டேற்றும்
சந்நிதித் தீபமென்னச்
சலம்வார்த்து மேற்றுவேன் பார்மினென வேற்றவருன்
தான்புரிந் தாளு முதலே
தீராத பவமெலாந் தீர்க்கின்ற நாதனே
திருவாரூர் மேவு மரசே
செங்குவளை கொன்றைநதி திங்களர வங்கள்புனை
செஞ்சடைத் தியா கேசனே. (௰)

தரணியிற் பிறந்திது வரைக்குநற் குணமொடு
தருமங்கள் செய்து மறியேன்
றலைமையுறு முனதுபுகழ் பேசியறி யேனுனது
சந்நிதியில் வந்து மறியேன்
பரணிமடல் கோவையந் தாதிபிள் ளைத்தமிட்
பாடிப்ப டிக்கவறி யேன்

பாடுவார் தங்களொடு கூடவறி யாமலுழ்று
பாவியே னெனினு மூன்று
புரநீறு படமுனம் நகைசெய்த வீசவுன்
பொன்னடி வணங்கி நாளும்
புகழோடு வாழ்ராம சாமிதவ மதனில்வரு
புதல்வனு னலையனாகுமோ
சிரநீறணி ந்திட்ட தேவாதி தேவவருள்
திருவாரூர் மேவு மரசே
செங்குவளை கொன்றைநதி திங்களர வெங்கள்புனை
செஞ்சடைத் தியாகேசனே (கக)

தியாகேசர் பதிகம் முற்றிற்று.



உ

சிவமயம்.

வேலுமயிலுந்துணை,

ஒய்யக்கொண்டான் சிறுவயல்

# பொன்னழகியம்மன் பதிகம்.

## காப்பு.

பொன்மருவுஞ்சீர்வயலிற் பொன்னழகி மேற்பதிகம்
சொன்னயத்திர் சொல்லவருந் தொல்லுலகில்-முன்னை
மரிமுகனை வென்ற வறுமுகற்கு மூத்த
கரிமுகனைக் கைதொழுதக் கால்.

## நூல்.

மாமேவு நவரத்ன மாடமொடு கூடங்கண்
மன்னிவாழ் நேம நாட்டில்
வானாறு போலவே தேனாறு பாய்தலால்
வானடெ னச்சி றந்த
காமேவு சீர்வயலில் வணிகர்குலம் வளரவருள்
கௌரிகிரி சூலி [illegible]

கங்காளி மாதங்கி தேவிமுக் கண்ணியுன்
கழல்களைத் தேடும் வேதப்
பாமேவு நினதுபுகழ் சொல்லிவாழ் புலவரொடு
பரவிவாழ் மாத வர்க்கும்
பாரிலருள் செய்பரா சத்தியிவ் வேளையிப்
பாலனேற் கருள் செயம்மா
பூமேவு குழன்மாத ரங்கையொடு கொங்கையிற்
பூசியெறி களபம் நாறும்
பொன்னுலகி தென்னவள மன்னுசிறு வயலில்வளர்
பொன்னழகி யம்மை யுமையே. (க)

அங்கைவடி வேலிலகு மெங்கள்முரு கேசனொ
டானைமுக னாதி யாய
வகிலங்கள்யாவையும் பெற்றவை வளர்த்திடு
மன்னையென வுற்றின் னமுங்
கொங்கைகள் தாழாத மங்கைபென் றுலகெலாங்
கொண்டாடு குமரி வாமி
கோதண்ட பாணியின் றங்கையே பாண்டியர்கள்
குலமது தழைத் தோங்கமா
நங்கையாய் வந்துவள ரங்கையற் கண்ணியே
ஞானமன்றை டொழியு முகிலே

நாதமெனும் பேர்புரிந்தோர் கொங்கைமறையவள
        நாணிமதி கங்கையுடனே
பொங்கரவு சூடிடுஞ் சங்கரன் றனைமணம்
        புரிசக்தி யெறகருள் செய்வாய்
பொன்னுலகி தென்னவள மன்னுசிறு வயிலில்வளர்
        பொன்னழகி யம்மை யுமைபே. (உ)

மாயாது சொழுனனும் நாமாது சேள்வனும்
        வானுடர் தம்பிறை வனும்
வந்தனைது பதமலரி னுதினம் வணங்கவுயர்
        வரபருளும் முதல்வி தேமி
காமாதி கரணங்கள் வென்றருளு முனியரன்
        காதிலுப தேசித் திடுங்
கந்தனை மைந்தனைப் பெற்றிடுங் கன்னியே
        கருணைமழை பொழியுமுகிலே
தாமாதி பஞ்சநவ கிரகமெனை வுலகினிற்
        றன்பப்படுத் தாயலே
தாயவருள் செய்தென்னை யாளுவாய் பரமனின்
        றனைவிடென வருகுந் தரி
பூமாது நிகரான மாமாத ரொருகோடி
        பும்பொழி லலாவ லாலே

பொன்னுலகி தென்னவள மன்னுசிறு வயிலிவ்வளர்
பொன்னழகி யம்மை யுமையே. (௫)

அன்னையே நீமுனஞ் செய்திட்ட நாலெட்
டறந்தன்னி லின்னல் நோயை
யகற்றிடு மறமொன்று செய்கையே யென்மட்டி
லவைநீ செயா திருத்த
லென்னவோ வறிகிலே னேழைமீ துன்றனக்
கெப்பொழுது கிருபை வருமோ
யிமயமலை யுதவவரு பசியகிளி வடிவழகி
யின்னருள்செய் தாள்வை யம்மா
மன்னவர்க டொழுகின்ற தென்னவன் னாட்டினில்
மன்னுமா நகர தனிலே
மாடமொடு மாளிகைகள் கூடமொடு கோபுரம்
மாமதில்கள் மண்ட பத்திற்
பொன்னூரவ மணிகளும் வைத்திழைத் தெங்கணும்
பொலிகின்ற சீரதனி னற்
பொன்னுலகி தென்னவள மன்னுசிறு வயலில்வளர்
பொன்னழகி யம்மையுமையே. (௬)

பத்தியொடு சீர்காழி தனினந்த வனமதைப்
பாகசா தனனும் வைத்துப்

பரிதிகிர ணங்களாற் காய்ந்திடக் கண்டுளம்
 பதைபதைத் திபமு கவனை
நத்தியே மோதக மிக்குதேன் பாகுபால்
 நற்கனி கவோ டவற்கு
நல்கவே வேணதை நவில்கெனக் குறியமுனி
 நாதனுற் பெறு கங்கையை
இத்திசையில் வருகநீ செய்யெனக் காகமா
 யேகிமுனி கலச மதனி
லேறிக்க விழ்த்தபின் பொன்னிமா நதியதா
 யேகெனச் சொலிவிட் டிடும்
புத்திரன் றனையீன்ற சத்திமா தேவியிப்
 போதென்னை யாளுமம்மா
பொன்னுலகி தென்னவள மன்னுசிறு வயலில்வளர்
 பொன்னழகி யம்மை யுமையே. (ரு)

மின்போலு மிடைபொடியு மொடியுமென் றென்றவ
 மென்சிலம் பொலிக ளார்ப்ப [ரின்
விம்மிப்பு டைத்திளகி யண்ணாந்த விருகொங்கை
 மின்னூர் கடன் றுவலால்
லென்போ லலைந்தவர்க ளறிவாள ரறிவிலா
 ரிருவர்களி லொருவ ருண்டோ

வென்செய்வ தென்றறிகிலே னம்மம்ம வென்கர்ம
மேதென் றெடுத் துரைப்பேன்
அன்போடு நின்னடியி லடியற்ற மரமதுபோ
லலறிவிழு மடியே னையு
மாதரித் தவனியிற் பிறவிதந் தலையாம
லாண்டருள வேண்டு மம்மா
பொன்போலு மேனியுள பாலகும ரேசனைப்
புதல்வனைப் பெற்ற வமுதே
பொன்னுலகி தென்னவள மன்னுசிறு வயலில்வளர்
பொன்னழகி யம்மை யுமையே. (௯)

அறிவரிய நினதுதிரு மலரடிநி னைக்கின்ற
வறிஞர்களி னுறவு வேண்டு
மகத்தொன் றுவைத்துப் புறத்தொன் று பேசுகின்
றவருறவை நீக்க வேண்டும்
தெரிவரிய நினதுபுகழ் செப்பவேண் டும்பொய்மை
செப்பாதி ருக்க வேண்டுஞ்
சினமிலா நெறிபிடித் தொழுகவேண் டும்மதத்
தீப்பேயு றாமை வேண்டும்
தெரிவையர்த மாசையை மறக்குமதி வேண்டுமுன்
சேவைமற வாமை வேண்டுஞ்

செப்பரிய நின்கருணை நிதிவேண்டும் நோயற்ற
செல்வமொடு வாழ்வு வேண்டும்
பொருவரிய கயமுகா சூரனைக் கொன்றிடும்
புதல்வனைப் பெற்ற குயிலே
பொன்னுலகி தென்னவள மன்னுசிறு வயலில்வளர்
பொன்னழகி யம்மை யுமையே. (எ)

இதழோடு நுதலாட வெழிலான முகமாட
விபமுகத் தைய னாட
விந்திரன் சசியோடு வானோர்க டாமாட
வெந்தைமுரு கேச னாட
மதனோடு ரதியாட மாலோடு நாலாட
மறைதந்த ப்ரம னாட
மானோடு மழுவாட விடையோடு கணமாட
மாமாது வாணி யாடப்
பதமோடு மலராட வட்டபா லகராடப்
பாடிடும் பெண்களாடப்
பரிதிமதி சேயாட குருவோடு குருவாட
பணிகளொடு மந்த னாடப்
புதனாட வினையோட வெனைநாடி விருதோடு
புவியினட மாடிவருவாய்

பொன்னுலகி தென்னவள மன்னுசிறு வயலில்வளர்
  பொன்னழகி யம்மை யுமையே (அ)

மாமாமா மாவெனக் கரிமுக னழைப்பவனே
  மதமிகுங் கரியு மன்று
வாவாவா வாவெனக் கூவியங் கழைக்கவே
  வந்ததற் கருள்செ ய்திடும்
வாமாவ தாரனு மாயவன் சோதரி
  வானிலரி யுதிக்கு முன்னம்
வாயினற் கூகூகூகூ வெனக் கூவிடும்
  மாசேவ லந்துவச னுங்
கோமானை யேற்கருள்செய் சீமானை யீன்றிடுங்
  குமரிகரு ணாநிதி யமே
கொடிதான வினையினைப் போபோபோ போவெனக்
  கூரிலதொ ளிந்திடாதோ
போமாறு செய்தென்னை யாளுவாய் மேனையின்
  புதல்வியாய் வந்த மயிலே
பொன்னுலகி தென்னவள மன்னுசிறு வயலில்வளர்
  பொன்னழகி யம்மை யுமையே. (கூ)

வேதாக மங்களிதி காசமும் புராணமும்
  விருப்பியே கற்றறிறி யேன்

மேலவரை நாடியுற வாடியறியேன் புவியின்
　　மீதறஞ் செய்துமறி யேன்
மாதாபி தாவோடு முனதடியர் தங்களின்
　　மலர்ப்பதம் வணக்கியறி யேன்
மடவார்க ளுறவாடி யுனைமனதி நினையாத
　　மாபாவி யென்னினுந் தான்
ஞாதாவின் முதன்மையுறு தாதாநீ யாகையாற்
　　ஞாதாவு னருளை யென்னத்
தானுடி வந்தனன் ருய்தனைச் சேர்ந்திடுந்
　　தனையனையு மாள விலையா
பூதாதி கணநாதர் தொழுகின்ற சத்தியிப்
　　போதென்னை யாள்வை யம்மா
பொன்னுலகி தென்னவள மன்னுசிறு வயலில்வளர்
　　பொன்னழகி யம்மை யுமையே. (ெ)

பொன்னழகியம்மன் பதிகம் முற்றிற்று.



உ

சிவமயம்.

வேலுமயிலுந்துணை.

## காரையம்பதிக்

# கொப்புடையம்மன் பதிகம்.



## காப்பு வெண்பா.

வடிவுடையாள் கொப்புடையாள் மாமேவுங் காரைக்
குடியுடையாள் மேற்பதிகங்கூறப்—படியனைத்துந்
தந்தனையே தந்தருளுந் தந்திமுக வன்னிருப
தந்தனையே தந்தருளுந் தா

## நூல்.

சீர்கொண்ட சுவணமலி யுவணைநக ரரசுபுரி
திறமருவு மரிமுத லவாந்
தேவர்முப் பத்துமுக் கோடியுங் கிம்புருடர்
சித்தர்சா ரணர்முத லியோர்
ஏர்கொண்ட மதுவொழுகு கமலமல ரெனவெழில்கொ
ளிணையடிகள் பரவ வவிரு

மேகாந்த வல்லியே பாகார்ந்த சொல்லியே
வின்பப் பெருக்க முதமே
கார்கொண்ட வண்ணனுங் கண்ணன்மகிழ் தங்கையே
கருணைமழை பொழியு முகிலே
கங்கைநதி புங்கமதி தங்குசடை யங்கனான்
காமாரி பங்கின் மணியே
தேர்கொண்ட தெருமருவு திகழ்பவனி வருபெரிய
செல்வியே யென்னை யாள்வாய்
திருமாது குடியாக வளர்காரை நகர்மேவு
தேவிகொப் புடையம் மையே. (க)

சங்கரி பராசக்தி கௌமாரி மாதங்கி
சச்சிதா னந்த ரூபி
சர்வபரி பூரணிப வானிசிவை வாராகி
சாம்பவி பரஞ்சோ தியே
புங்கவி நினைந்தவர் வரந்தரு சுதந்தரி
புரந்தரா தியர்கள் போற்ற
பொற்புமிகு விற்பரவு பொற்சிகரி விற்பொலிசெய்
பொற்கையர னுக்கொரிட மார்
பங்குறைசெய் மங்கைவளர் செங்கைமிசை கங்கைநதி
பரவுநிறை கருணை வடிவே

பரவுமடி யவர் உண்மன விருளகல வளரொளிசெய்
பானுவாம் ஞான மணியே
திங்களணி செஞ்சடைவி ளங்குமக ளங்கிமிகு
சிறியனேற் கருள் செயம்மா
திருமாது குடியாக வளர்காரை நகர்மேவு
தேவிகொப் புடையம் மையே. (உ)

பூரணிபு ராதனிக ராசலக ராசைபொடு
போர்த்திற மறந்து வாடிப்
பொற்புறும டுக்கண்மிக வெய்த்துமுத லைப்பெரிய
பொரிவாயி னின்று வெருவி
யாரணத் துறையாதி மூலமே சோதியே
வதிககரு ணைப்பெரு க்கே
யண்ணலே யெனவழைக் கிடவந்து காத்தருள்செய்
யரிசகோ தரிபெரு மையார்
தாரணி புரந்தஜெய வீரனும் பாண்டியன்
றவமதனில் வந்து தித்த
தனையையனே யனவரத முனதுமல ரடிபரவு
தனையனெனை யாள்வை யம்மா
தேரணியு டன்றெருவி னிற்பவனி வருகின்ற
தெள் ளமுதமே சிறந்த

திருமாது குடியாக வளர்காரை நகர்மேவு
தேவிகொப் புடையம் மையே (௩.)

மருமேவு மலர்மேவு திருமாது கலைமாது
வந்திரு புரத்து நின்று
வளரொளிசெய் கவரிநிரை யசயவிட வருள்புரியும்
வனிதையதி சுமுக வதனி
உருமேவு தருமேவி லொளிமேவு வசுவாகி
யுற்ற நாட்டரசன் முதலா
மும்பர்கள்வ ணங்குபத நங்கையே யடியவற்
கோய்வின்றி யுழலு நோயாங்
கருமேவு ஜனபதம டைத்துநிறை தருபெரிய
கருணைமழை பொழியு முகிலே
கந்துகத் தொடுமேருவு சந்தனத் திடையடியர்
கண்கழித் திடவளஞ் சேர்
தெருமேவி வருதாயு னதுபாத மலர்மீது
சிந்தையுற வெற்கருள் செய்வாய்
திருமாதுகுடியாக வளர்காரை நகர்மேவு
தேவிகொப் புடையம் மையே. ௪)

கங்காளி திரிசூலி யம்பிகை பராசக்தி
கௌமாரி காத்பா யனி

கஞ்சலோ சனிகௌரி வஞ்சமா மனமுடையர்
காணறிய ஞான வடிவே
பொங்காளி யிடைவந்த விடமுண்ட கண்டனைப்
போற்றினை யுளத்து வைத்துப்
பொன்முடி கவித்துநவ மணிகுலவு மணிகளாற்
பொற்புறச் செய்துநித மும்
மங்காத செல்வப்பெ ருக்கினொடு மரசுசெய
வைத்தமதி வதன நிதியே
மதியிலதி மடையனெனு மடியனென வுனதுமனம்
வைத்தெனைக் காரு மம்மா
செங்காவி பொங்காவி மங்காவ கன்காவு
சிங்காது சூழ்ந்தெழில் செயத்
திருமாது குடியாக வளர்காரை நகர்மேவு
தேவிகொப் புடையம் மையே (ரு)

முத்தணிகொள் மத்தகம தொத்திடுத னத்தியர்கண்
முகமதியி லேறுத லிலே
முளரிமல ரெனவெழில்செ யிருவிழியின் வழியொ
முதியவபி நயமத னிலே [முகு
ந்தனக முத்தினிடை நடைநொடியி லுடையிடையி
ஞடிமிக வாடி டாது

நதியரவு மதிமருவு சடையுடைய பரமனிட
நண்ணிவளர் பெண்ணமுதெனும்
முத்திவித் தாமுனது பத்தர்மன மகிழ்வினொடு
முதன்மைபெறு கூட்டத்திலே
முருகுவிரி கமலமலரெனுமுனது திருவடியின்
முசுவெனத் திரியுமெந்தன்
சித்தநிறை யாகவே வைத்திடக் கருணைபுரி
செல்விபல வளநி றைந்து
திருமாது குடியாக வளர்காரை நகர்மேவு
தேவிகோப் புடையம் மையே (க)

வேலெடுத் தடுகொடிய வாலமொத் திடுமசுர
வேலையட் டெழுபர வைசூழ்
மேதினிக் கரியதுயர் தீர்தரப் புரிகுழகன்
வேதனுக் கருள்செய் குகனுங்
கோலமுற் றிடுமயிலி னேறியெற் கருளவரு
கோமளப் புதல்வ னனையே
கோசலைக் கருமைமக னவற் கிளையயுமை
கூடலுக் கரசிப ரைமா
ஞாலமுற் றிலுமுதவு தாயெனப் புலவர்பணி
நாரிமுக் கணிய மலையே

நாடிநித் தமுமுனது தாள்களைப் பரவிவரு
நாய்கருக் கருள்செய் திருவே
சீலமெப் பொழுதுமறி யாதசொற் பகருமதி
சேருமிச் சிறிய னெனையாள்
திரும'து குடியாக வளர்காரை நகர்மேவு
தேவிகொப் புடையம் மையே (எ)



மலையொத்த புயமு[illegible]மதவ[illegible] வதனத்தன்
மாகயமென [illegible]வாயு தத்[illegible]
மடியாத செயல்க[illegible] [illegible]மென
மதித்தரனை யுன்[illegible]றுங
கலையொன்றின் மதிரெண்டி தெனநின்று கிளர்கின்ற
கவின்வலக் கொம்பொ டித்துக்
கைக்கொண்டு விட்டுடற் படியிடைப் பொடித்தடல்
கடவுளுல கங்கள் காத்த [செய்
நிலையுறு மணிப்புயன் புலவர்க டுதிக்கமிகு
நேயம்வைத் தாண்ட பெருமான்
நித்தியா னந்தனு மேரம்ப னைப்பெற்ற
நிமலிபரை சிவைய மலையே
சிலைதனைச் சிலையெனக் கொண்டபர னிடமருவு
செல்வியே சிறியனெ னையாள்

திருமாது குடியாக வளர்காரை நகர்மேவு
தேவிகோப் புடையம் மையே (அ)

மங்கையர்கள் கொங்கையிடை யிங்கிதமு யங்கிமிக
வருகின்ற பெருநோய் களும்
மட்டிலாத் துயரிலடி பட்டதனி லேமனம்
வருந்திவரு கின்ற பிணியும்
மங்குமன வஞ்சகர்க ணெஞ்சினினி னைந்துசெய
வருபில்லி சூனி யம்மா
வனமருவி வருவிலங் காதிகளி னலென்றும்
வருபயம் பிரவ னைத்தும்
புங்கமுற முனதடிய ரடையாது காத்திடும்
பூரணிபு ராதனி சிவை
புனிதர்க மகிழவரு கருணைபொழி யமுதமே
புண்ணியம் வளர்த்த திருவே
சிங்கவா கனமேறு செல்வியென் பவமெலாந்
தீர்த்தாண்டு கருணைபுரிவாய்
திருமாது குடியாக வளர்காரை நகர்மேவு
தேவிகோப் புடையம் மையே. (௯)

மகமாயி செகமாயை புகழ்ந்கி மிகமாழ்கு
மனிதருன தடியி னேயம்

வதியுமன துடையரெனி னவர்கள்கட வுளர்கணித
மருவுபத முறுவ ரெனவே
மிகுவாய மறைகூறு மெனினினது மகிமைதனை
விரியவுரை தருவ ரெவரே
விஜயமிகு திரிபுரரை யரைநொடியி னிரைபொடிசெய்
விமலநகை யுடைய ரிடமார்
தகைமேவு நிதியமே தந்திவத் திரமுடைய
தனையன்மகி ழினிய வனையே
தனதனென நனிகனக மிகவரினு முனதடிச்
சார்பிலார் பெருமை யிலரே
திகழ்கார வரைராசன் மகளான சிவகாமி
சிறியேனை யாள்வை யம்மா
திருமாது குடியாக வளர்காரை நகர்மேவு
தேவிகொப் புடையம் மையே (ω)

தாயார் வயிற்றிற் பிறந்துபுவி மீதுயான்
றன்மமது செய்து மறியேன்
றஞ்சமென வந்தவரை யஞ்சவேண் டாமென்று
சாற்றும்வகை தானு மறியேன்
ஆயாச மாய்வரு மடியார்க ளுக்கன்ன
மன்புடன ளித்து மறியேன்

அந்தனார்கள் பெரியோர்க டாய்தந்தை குரவோர்க
ளடிதனை வணங்கியறி யேன்
ஓயாமன் மாதரின் மயல்கொண்டு நிதநிதமு
மோடித்தி ரிந்தலை குவே
னுன்னைநினை யாமலுறு பாவியே னென்னினு
முனைப்பணியு மிராம சாமி
சேயான தாலென்னை யலையவிட நீதியோ
சித்தமிரங் வத் தாள்வை யம்மா
திருமாது குடியாக வளர்காரை நகர்மேவு
தேவிகொப் புடையம் மையே. (௰க)

கோப்புடையம்மன் பதிகம் முற்றிற்று.



உ

சிவமயம்.

வேலுமயிலுந்துணை.

காரையம்பதி

# மீனாட்சியம்மன் பதிகம்.



## காப்பு வெண்பா.

சீர்மருவுங் காரைநகர்ச் செல்வியா மீனாளுக்
கேர்மருவு மென்பாவுக்கின்பருளுங்—கூர்மருவு
மிகதுமுகத் தந்திவணத் தெந்தைதனைத தந்தை
தந்திமுகத் தைந்துகரன் றாள் [யெனுந்

## நூல்.

சீர்மேவு கமலமலர் மேவயன் மாலுமுன்
திருப்பதம் வணங்கி நிற்க
சித்தர்வித் தியாதரர்கள் தேவர்முத லானபேர்
ஜெயவிஜய வென்று போற்ற
வார்மேவு கொங்கையம் பூமாது நாமாது
மாகவரி வீசி நிற்க

மயிலவன் கஜமுகன் வந்துமடி மீதேற
　　மறையவர்ப லாண்டு கூற
பார்மேவு வினைதுபுகழ் சொல்லியே ரம்பையர்கள்
　　பண்ணுடன் நடன மாட
பக்தியொடு குடைதனைக் கணநாதர் பற்றவே
　　பல்லியங் கடலி னார்க்க
தார்மேவு தோரணத் தெருவீதி பவனிவரு
　　சாம்பவியி வேளையருள் வாய்
தருமேவு சுரர்நாடு நிகர்காரை நகர்மேவு
　　சத்தி மீனாட்சி யுமையே　　　　க)

விலைவாங்கி யணைகின்ற வஞ்சமட மாதர்வாய்
　　வெட்டிலே பொட்டிலேவெவ்
வேலொத்த விழியிலே பாலொத்த மொழியிலே
　　மின்னிடையி லேநடை யிலே
மலையதனை யொத்தசீர் முலையிலே கலையிலே
　　மதிவதன வொளிதன் னிலே
மஞ்சளின் பூச்சிலே யங்கையின் வீச்சிலே
　　மலரடியி லேபொடி யிலே
சிலையதனை யொத்திடும் நுதலிலே யிதழிலே
　　சிந்தைதனை நுழைய விட்டுத்

திரிந்துநா னலையாம லறிவிலே பொறையிலே
திருவடியர் கூட்டத் திலே
தலைமைபெறு மன்பிலே யுனதுதிரு வடியிலே
தமியனைக முறவை யம்மா
தருமேவு சுரர்நாடு நிகர்காரை நகர்மேவு
சத்தி மீனாட்சி யுமையே (௨)

மலர்மேவு கலைவாணி மனமூடு தொழுநாடி
வரநாளு மருள் தேவியே
வனமேவு சனகாதி முனிவோர்க ளுனைநாடி
மகமாயி சிவை நாரிமா
சிலைராசன் மகளான வுமைநேமி யபிராமி
சிவகாமி யருள்வா யெனத்
திகழ்பாத மலர்மீது விழுகாலே யருள்வாலே
திரிசூலி பரைவாமி நீ
மலைபோல முலைமேவு விலைமாதர் தமதாசை
மயலூடு சுழல்கா லெனு
மனம்வாடி யுழல்வேனை யருள்போத விதுவேளை
வரவேணு மிவணு டியே
தலைமீது நதியோடு மதிசூடு சிவனோடு
சமராடி வருநீ லியே

தருமேவு சுரர்நாடு நிகர்காரை நகர்மேவு
சத்தி மீனுட்சி யுமையே. (௩)

சென்னியி ரைந்துடைய ராவணன் மாதவஞ்
செய்துமுக் கணனி டத்திற்
சென்றுசிவ லிங்கமதை வாங்கிவரும் வழியினிற்
றேவர்கோ னேவ லாலே
அன்னவன் காணவோ ரந்தணச் சிறுவனு
யருகில்வர நிருதர் கோனு
மையனே பார்தன்னில் வையாம லிருவென
வளித்தவன் வருகு முன்னம்
மன்னவா வென்றுகூஉயப் பூமிமிசை தாபிக்க
வந்தவன் குட்டுதல் செய
வானமுக டுறநிமிர்ந் தன்றுமுத லைவ்பெறும்
மதகஜ முகத்து வள்ளல்
தன்னையருள் பச்சைப்ப சுங்கிள்ளை யபிராமி
தருணமிது கருணை செய்வாய
தருமேவு சுரர்நாடு நிகர்காரை நகர்மேவு
சத்தி மீனுட்சி யுமையே. (௪)

சிங்கமுகன் முதலான வசுரருக் கஞ்சியே
திருமாது கேள்வ னயனுந்

தேவரிந் திரனோடு கையிலையங் கிரியினிற்
சென்றரன் றன்னை யேத்தி
யிங்கிவர்கள் செய்துன்ப மாற்றியருள் வாயென்ன
வெந்தை யறுமுகனை நோக்கி
யேகென்ன முருகவேள் தாருகா சூரனொடு
மிருபிளப் பாகவ ரையை
யங்கைவடி வேலாற்பி ளந்துபின் வாகுவா
மறிஞனைத் தூது விட்டங்
கரிமுகன் சூரனைக் கொன்றமக பதிதனக்
கன்றுமுடி சூட்டி வந்த
தங்கவடி வேலனைப் பெற்றசா மளை குமரி
தருணமிது கருணை செய்வாய்
தருமேவு சுரர்நாடு நிகர்காரை நகர்மேவு
சத்தி மீனாட்சி யுமையே. (ரு)

அங்கப்பெ ருங்கப்ப லேறிப்பி றப்பென்னு
மலைகடலி லோடு நாளி
லப்மையே கர்மவினை யாஞ்சுழல் காற்றினு
லறிவெனுங் திசைக டப்பித்
தங்காது துயராங்க ருங்கடற் பாய்ந்துமெய்
சாருபிணி யென்னு மலைகள்

தாக்கவே யுடைவேனை யுயிரென்னு மாலுமி
தானங்கு நீங்குதல் செய
அங்குவந் தேமனுஞ் சுறவுண்ண கோரத்தை
யாதென்றெ டுத்துரைப் பேன்
அடியேனு மிவ்வண்ண மாயின்ன முலகத்தி
லலையாது காத்தருளு வாய்
சங்குசக் கரந்தண்டு வாள்சிலை கொண்டமால்
தங்கை யாமளைய மலையே
தருமேவு சுரர்நாடு நிகர்காரை நகர்மேவு
சத்தி மீனாட்சி யுமையே. (அ)

நாயினே னுறுதுயற மிவ்வள வெனப்பகர
நாவொன்று போதாது மேல்
நாடிவந் தென்குறை யகற்றுவார் நீயலால்
நானிலத் தொருவ ரில்லை
பேயனைய பித்தனுத் திரிந்தலைந் தாலுமப்
பிள்ளைதனை யுலக தனிலே
பிரியமாய்ப் பெற்றிடுந் தாய்தள்ளி விட்டிடிற்
பின்னெங்கு செல்லு மம்மா
நீயேது மறி யாதுபோலிருப் பதுவுமொரு
நீதியோ தயவில் லையோ

நெஞ்சத்து ணினைவையே லென்னகத் துறுதுன்பம்
 நீக்குவ துனக்கரு மையோ
தாயேநின் னாதரவை நம்பினே னருள்புரிவை
 சமயமிது சமய மம்மா
தருமேவு சுரர்நாடு நிகர்காரை நகர்மேவு
 சத்தி மீனாட்சி யுமையே. (எ)

கருவமிகு கடல்தனை வேல்விட் டடக்கியுங்
 ககனவழி யாக வேகிக்
கடவுளர்க் கிறையுட னிருக்கவ னாவிடுங்
 கனகமணி யார மேற்றும்
பருவமுகி லைத்தளைக ளிட்டுவரு மாரியின்முடி
 பருவளையி னாலெறிந் தும்
பரிவுடன் பின்னவன் வேண்டிடக் காரதைப்
 பண்புடன் றளைக னீக்கித்
திருநகரின் மழையொழுக வளமிகுகி கண்டுமுயற்
 திரவியக் குவியல் வேண்டிச்
சிலைதனைச் சென்டாற்பு டைத்துநிதி கொண்டும்வளர்
 செல்வனைப் பெற்றெ டுத்த
சருவபரி பூரணச் சச்சிதாநந்தியே
 தருணமிது கருணை செய்வாய்

தருமேவு சுரர்நாடு நிகர்காரை நகர்மேவு
சத்திமீனாட்சி யுமையே (அ)

கருணைக்கி லித்தாயி ருப்பதுந் துயரைக்
களைந்தினிக் குறைவ ராமற்
காத்தன்பர் தமையிரட் சிப்பதும் பொய்யல்ல
கருதுநின் னியல்புக் குணம்
வருணாக்க லாபமயில் வடிவுற்ற வல்லியென்
வறுமைபிணி துயரம் யாவும்
மாற்றியே யருள்புரிந் தாளென்ன நித்தமும்
வருந்திநின் பாலுரைத் தும்
இருணீக்கி யொளிதரு மிரவியைப் போலநீ
யெனக்கருள் செயா திருத்த
லென்போலாக் கன்மமோ வலதுகலி காலத்தி
னேற்றமோ யடிமை யலவோ
தருணத்தி லுதவிசெய் யாததுந் தகுதியோ
தமியனெற் கருள்செ யம்மா
தருமேவு சுரர்நாடு நிகர்காரை நகர்மேவு
சத்தி மீனாட்சி யுமையே. (கூ)

பூமிதனி லேபிறந் திதுவரையு நற்செயல்கள்
புந்தியினி னேந்துமறி யேன்

பூசைசெயு முனதடியர் தங்களுக் கன்புடன்
போசன மளித்து மறியேன்
வாமிநிலை பேசுகலை யோதியறி யேன்சுருதி
வாசகங் கேட்டு மறியேன்
மறையோர்கள் முதியோர்கள் குரவோர்க ளனைதந்தை
மலரடி வணங்கி யறியேன்
மாமினார் மயலெனும் வலைதனிற் சிக்கியே
மதிகெட் டலைந் தேனுனை
வணங்காத பாவியே னென்னினும் நிதமுன்னை
வாழ்த்தித் துதிக்கும் ராம
சாமிதரு புதல்வனெனை யலையவிட றகுதியோ
தருணமிது கருணை செய்வாய்
தருமேவு சுரர்நாடு நிகர்காரை நகர்மேவு
சத்தி மீனாட்சி யுமையே. (ம)

மீனாட்சியம்மன் பதிகம் முற்றிற்று.



சிவமயம்.

வேலுமயிலுந் துணை.

காரையம்பதிக்

# கொப்புடையம்மன் வருகைப் பதிகம்.



காப்பு வெண்பா.

ஞாலம் புகழ்காரை நன்னகரிற் கொப்புடையாள்
மேலம் பதிக மதைவிளம்பச்-சீலமிகுங்
கொந்தளக பாரக் குமரிதரு தந்திமுக
வந்துனரு டந்தாளு வாய்

## நூல்.

பொன்னேவருக வமரர்தொழும் பூவேவருக பூவீன்ற
வன்னேவருக வறம்வளர்த்த அணங்கேவருக வருளளிக்க
வின்னேவருக விமயமலை யீன்றாள்வருக வெழிற்காரை
மன்னேவருக கொப்புடைய மாதாவருக வருகவே (க)

திருவேவருக நாரணியாந் தேவிவருக சிரந்தமலர்த்
தருவேவருக மகிஜனைமுன் சதித்தாள்வருக தமியேனின்
குருவேவருக நற்காரைக் குடியாள்வருக குணமிகுத்த
மருவேவருக கொப்புடைய மாதாவருக வருகவே (௨)

தேனேவருக காரைநகர்த் தேவேவருக சிரந்தமலர்க்
கானேவருக யினித்தசுவைக் கரும்பேவருக கருணைசெய்த்
தானேவருக சண்முகற்குத் தாயேவருக தக்கனருள்
மானேவருக கொப்புடைய மாதாவருக வருகவே (௩)

குயிலேவருக கோணங்கைக் கொண்டாள்வருக கொள்கருணைப்
புயலேவருக பட்டாடை புனைந்தாள்வருக வழகுக்கோ
வியமேவருக வாணிதொழும் வித்தேவருக வியன்காரை
மயிலேவருக கொப்புடைய மாதாவருக வருகவே (௪)

நங்கைவருக வலைஞர்குல நாரிவருக நலமருள
விங்குவருக யிபமுகனை யீன்றாள்வருக வெழில்மாயன்
றங்கைவருக காரைநகர் சத்திவருக பேணதரும்
மங்கைவருக கொப்புடைய மாதாவருக வருகவே (௫)

அணங்கேவருக யெனக்கருளு மயலேவருக முப்புரத்தைத்
தணைந்தாய்வருக அரிநடத்துஞ் சமர்த்திவருக சார்மூன்று
குணத்தாய்வருக மாகாரைக் குடியாள்வருக பரம்பொருளை
மணந்தாய்வருக கொப்புடைய மாதாவருக வருகவே (௬)

துதிக்கவருக பத்தர்தனைச் சூழாய்வருக மூதறிவைப்
பதிக்கவருக புத்தமுதப் பாகேவருக வூழ்வினையைச்
சதிக்கவருக கைக்களிறின் றாயேவருக காரைநகர்
மதிக்கவருக கொப்புடைய மாதாவருக வருகவே (எ)

பணியேவருக யெனதுகணுற் பார்க்கவருக பதத்தின்மலர்
அணியவருக யெங்கள்குலத் தரசிவருக யெனதுபவந்
தணியவருக காரைநகர்ச் சத்திவருக வொளிதிசழும்
மணியேவருக கொப்புடைய மாதாவருகவருகவே (அ)

அடுத்துவருக வெனைப்புரக்கு மம்மேவருக சயற்கொடியும்
பிடித்துவருக விந்தைதொழும் பிடியேவருக வரிமீது
நடித்துவருக வாழ்காரை நகராள்வருக மறைமொழித்தேன்
வடித்துவருக கொப்புடைய மாதாவருக வருகவே (கூ)

தருகவருக வருளதனைத் தாயேவருக யெனதுவினைக்
குருகவருக காரைநக ருடையாள்வருக யெற்குநிதி
பெருகவருக வழுதிதரும் பிடியேவருக விப்பொழுதே
வருகவருக கொப்புடைய மாதாவருக வருகவே. (ώ)

கோப்புடையம்மன் வருகைப்பதிகம்
முற்றுப்பெற்றது.

சிவமயம்.

வேலுமயிலுந்துணை.

# பீந்தசாக் குமரகுருபரன் பதிகம்.

## காப்பு விருத்தம்.

சீரோங்க மேருதனை வளைத்தபிரான் றிருக்கோயிற்
பணிசெய் முல்லைத்
தாரோங்குந் தனவணிகர் குலம்வளர விருநிதியந்
தழைத்த தன்னோர்தம்
பேரோங்க வருள்புரியும் பீந்தசாக் குகன்பதிகம்
பேசு தற்குப்
பாரோங்க வறம்வளர்த்த பாவைதருங் கணபதியைப்
பணிதல் செய்வாம்

## நூல்.

திருமால்மருகா முருகோனே தெய்வயானை மகிழ்வோனே
பெருமாநிலத்தில் வந்தின்னம் பிறவாதருள்வாய் நஞ்சுண்ட
பெருமான்றேழன் னகரென்னப் பிறங்கும் பீந்தசாதனிலே
யருமாதவர்க டொழுதேத்த வமருங்குமர குருபரனே (க)

வடிவேலணிந்த மணிமார்பா வள்ளிக்குகந்தமணவாளா
கொடியோனான யெமன்பாவி கொடியதூதரெனைவந்து
பிடியாதிருக்க வரந்தருவாய் பேசும்பீந்த சாதனிலே
யடியார்கூட்ட மிகுந்தோங்கவமருங்குமர குருபரனே (உ)

வல்லார்வல்ல கலைஞருக்கும் மறைநூலவர்க்கும் வானவற்கு
மல்லல்நீக்கி யாண்டவனே யடியேன்வறுமை தவிர்த்தருள்வாய்
செவ்வார்பொழில்கள் சூழ்ந்தெங்குஞ் சிறக்கும் பீந்தசாதனிலே
அல்லும்பகலும் வணிகர்தொழ வமருங்குமர குருபரனே (ஈ)

கண்டந்தன்னில் நஞ்சடக்கிக் கடவுள்காக்க வமுதமதை
யுண்டதேவற் கருள்புரியு முமையாள்மகனே கருணைசெய்வாய்
கொண்டல்படிய வளமிகவே குலவும்பீந்த சாதனிலே
யண்டர்வந்து தொழுதேத்த வமருங்குமர குருபரனே (ச)

திறஞ்சேர்சூரபதுமனுடன் சிங்கமுகனைத் தாருகனை
யுரஞ்சேர்மலையா யுற்றகிர வுஞ்சந்தன்னை யட்டவயில்
கரஞ்சேர்குகனே வருள்புரிவாய் கவின்சொள் பீந்தசாதனிலே
வறஞ்சேர்வணிகற் கருள்புரிய வமருங்குமர குருபரனே (ரு)

தானுய்நாறுங் கருங்குழலாள் சாமளவுமையாள்தருபாலா
மானுர்மயலிற் சிக்கிநிதம் வருந்தாதெனக்கே யருள்புரிவாய்
வானுடுற்ற தேவரெல்லாம் மதிக்கும்பீந்த சாதனிலே
யானுச்செல்வம் வணிகருற வமருங்குமர குருபரனே (சா)

ருமான் றன்னைக் கரம்வைத்தே யொருமான் றன்னைச் சிரம்வைத்த
பெருமான்பெற்ற முருகோனே பிறவிவினையைத் தவிர்த்தருள்வாய்
திருமால்மனைவி குடிமேவிச் சிறக்கும்பீந்த சாதனிலே
யருமாமறையோர் தொழுதேத்த வமருங்குமர குருபரனே (எ)

வட்டமிட்ட குவிமுலையாள் வள்ளி மகிழும் வடிவேலா
பட்டபாடு போதுமுன்றன்பதத்தைத் தந்தே யருள்புரிவா
யிட்ட முடனே யுனதடியா ரிலங்கும் பீந்த சாதனிலே
யட்டதிக்குப் பாலர்தொழ வமருங்குமர குருபரனே (அ)

புரத்தைச் சிரித்தே யெரித்தவனின் புதல்வா வரியின் றிருமருகா
பரத்தை மார்கள் வலைதனிலே பட்டு வருந்தா தென்றனுக்கே
வரத்தை தந்தே யருள்புரிவாய் வழுத்தும் பீந்தசாதனிலே
அறத்தைப் புரியும்வணிகர்தொழ வமருங்குமர குருபரனே (௯)

அமராபதியி னன்றுமுடி யரிக்குச்சூட்டி யவன்மகளை
யமராபதியில் மணஞ்செய்த வரசேவறுமை தவிர்த்தருள்வா
யமராபதியே நிகராக யறையும் பீந்தசாதனிலே
யமராபதியோர் தொழுதேத்த வமருங்குமர குருபரனே (௰)

அரியின் புதல்வன் கவசமதை யரியேவலினால் வாங்கிவந்த
அரியின் மருகா வுனைநானு மறியும்படியே யருள்புரிவாய்
அரியின் மகனார் திருத்தேவி யமரும்பீந்த சாதனிலே
அரியு மயனுந் தொழுதேத்த அமருங்குமர குருபரனே (௧௧)

குமரகுருபரன்பதிகம் முற்றுப்பெற்றது.

சிவமயம்.

வேலுமயிலுந்துணை.

# திருச்செந்திற் றிருப்புகழ்.



தனதன தந்தத் தனத்த தானன
தனதன தந்தத் தனத்த தானன
தனதன தந்தத் தனத்த தானன—தனதான

நிலவளை பொன்றிக் கயத்து ளீரது
நிரைதரு செந்திற் பதிக்கி நாயக
நிசிசரர் வஞ்சத் துடர்ற மாயாபின்—வலியோடே

நெடியவில் சொணடக் கவத்தி வேயெவ
ருயிரையு முண்டக் குலத்தை வேரொடு
நிலவ்வரை கிண்டிக் கெடுத்த மாயவன்—மருகோனே

கலைமகள் களசத் திருக்கு மாதொடு
நிதமனை தொன்றித் துதிக்க நாடிய
கருமமு முந்திக் கொடுத்த நாயகி—யருளோடே

கடுமுனை முண்டிட் டவற்கும் நாயகி
பகவதி சிங்கத் திருக்கு மாதரி
ககனமு மிந்தப் புவிக்கு ளாரையு—மருள்மாதா

மலைமக ளஞ்சக் கரத்தி பூரணி
சயமகள் மொய்ம்பெட் டிருக்கு நாரணி
மனுபதி வஞ்சக் கரத்தி யாமளை—தருபாலா

மலைநிகர் கொங்கைக் குடத்தி லேயவர்
சொலு மொழியின்பப் பசப்பி லேநிரை
மதிமுக மங்கைப பிலுக்கி லேயுற—மயலாலே

யலைவுறு வஞ்சச் சமத்த னுய்மதி
யிலையெனு மென்னைப் புரக்க நீயயி
லதுதனில் வந்திக் கணத்தி லேயரு—டருவாயே

அசுரரை முந்தித் தொலைதத மானவ
குறமக ளுங்கைப் பிடித்த நாயக
அரிமகள் வந்தித் தணைக்கும் வேலவ—முருகோனே

---

தந்தத் தனதன தனனு தனனு
தந்தத் தனதன தனனு தனனு
தந்தத் தனதன தனனு தனனு தனதானு

செஞ்சொற் சொலுமொழி குயிலோ கிளியோ

கண்டிற் கினியப ளிதமோ வமுதோ
தின்கச் சுவைமிகு கனியோ மதுவோ—குழல்தானே
செம்பொற் கரமது மலரோ தளிரோ
வஞ்சிக் கல்குலர சிலையோ ரதமோ
சிந்தித் திடிலிடை யுளதோ விலையோ—வலநாலோ
கொஞ்சத் தருமுக மதிவா ரிசமோ
அம்பைப் பொரும்விழி கயலோ கடலோ
குன்றச் சிலையவ னுமாவிடமோ—வடிவேலோ
கொந்துத் தருகுழ லரலோ முகிலோ
பந்தொத் தெழுமுலை முடியோ கரியோ
கும்பத் தொடுமலை சிமிழோ குமிழோ—வெனுமானர்
வஞ்சக் கலவியின் மயலா லவர்பா
லின்புற் றனுதின மலையா துறவே
வந்திக் கனமதி னருள்தா னருள்வாய்—குணசிலா
மண்ணிற் றசரதன் மகனா கியகோ
தண்டச் சிலையவன் மருகா குமரா
மன்றற் குழலுமை தருமா மகனே—குமரேசா
மஞ்சுக் கதிபதி மகளசேர் புயனே
தொந்திக் கரிமுகன் மகிழ்சோ தரனே
வள்ளைக் குறமகள் கணவா குகனே—மயில்வீரா

மங்குற் குலமுறு பொழில்மா மதில்சூழ்
செந்திற் பதிதனில் வளர்வே லவனே
வந்தித் திடுமடி யவர்பா லருளசேர்—பெருமாளே



# திருவாரூர்த் திருப்புகழ்.



தத்த தத்த தத்த தத்த
தத்த தத்த தத்த தத்த
தத்த தத்த தத்த தத்த—தனதான

மெத்த லெட்ச ணத்தை யுற்ற
தத்தை டைத்த ரத்தில் வைத்து
மிக்க மிக்க நத்தி நத்தி—மயலாலே

வெற்பெ னக்க தித்து வச்ர
கச்சி னேக்கி ழித்து வட்டை
வெத்தி மத்த கத்தை யொத்த—யெழிலாலே

சித்தி ரக்கு டத்தை வட்ட
மிட்ட புற்பு தத்தை யட்ட
செப்பெனப்ப ணைத்தி ணைத்துப்—புலவோரே

செப்ப வொப்பு சொக்க மத்தி
யத்தி லத்து டுக்கை பொதத
சிற்றி டுப்ப டர்த்த குத்த—முலைமீதே

முத்த மிட்ட ணைத்தி ழுத்து
மெத்தை யிற்ப டுத்து பெச்சி
முகக ளிச்ச ருக்க ரைக்கு—மகிழ்வானேன்

முச்செ கத்தி லித்த ரத்தை
யுற்ற வெற்கி ரக்க முறறு
முட்டு செச்சை யுற்ற வத்த—வருடாருய்

உத்த மச்சி கப்பு பச்சை
முத்து வச்சி ரத்தி ழைத்த
வுபப ரிக்கை மிக்க வுற்ற—திருவாரூர்

உற்ற கத்த செற்றி யிற்க
ணுற்ற ரக்க ணுக்கி டத்தி
லுற்ற சத்தி பெற்றெ டுதத—பெருமாளே

# காரையம்பதித் திருப்புகழ்.



தான தந்தன தந்தன தந்தன
தான தந்தன தந்தன தந்தன
தான தந்தன தந்தன தந்தன—தனதானா

பூத லம்புக மும்பிகை சங்கரி
தேவி சங்கரி தங்கைசு வுந்தரி
பூர ணன்புய முந்தவ ளேந்திடு—சிவைமாதா

பூமி யெண்டிசை யுந்தரு சுந்தரி
மேனை தந்திடு மந்தரி சண்டிகை
பூசு கந்தம ணிந்திடு கன்னிமு—னருள்பாலா

வேத னும்வெளி யங்கிரி யெம்பெரு
மானை யஞ்சலி பண்ணிய வன்வரு
வேலை கண்டுனை யஞ்சலி பண்ணில—மெனவேகா

வேத நின்றெழி லென்னென வன்னவ
னோத வன்னதி லொன்றுசொ லென்னவவ்
வேலை யங்குரை முன்சொல்ப யன்றனை—யறியாதே

சீத பங்கப முந்துபிர் மன்னுற

வேவி லங்குக வங்கையொ டுங்கழல்
சேர வன்சிறை யுன்னென முன்னிடு—குருநாதா
சிரி லங்கையின் மன்னவ னுங்குல
மோட ளிந்திட வம்புமு னம்விடு
சீத ரன்புகழ் கண்ணன்மை வண்ணனின்--மருகோனே
காதல் தந்திடு மங்கையர் வந்துன
தாவி யென்றெனை யங்கவர் பங்கய
காலி லொன்றிடு தந்திர வஞ்சனை—செயமானர்
காம மொன்றிய லைந்திடு மென்றனை
நாயி னுங்கடை யென்றுநி னைந்தருள்
காரையம்பதி தன்னில மர்ந்திடு—பெருமாளே

## சிறுவயற் றிருப்புகழ்,

தான தனதன தான தனதன
தான தனதன தான தனதன
தான தனதன தான தனதன—தந்தான

பாலோ கனியமு தோடே ருசிமிகு
தேனோ குயில்கிளி யாழோ நலமுறு
பாகோ மொழிபது சீனு நகருற்று—கண்டுதானோ

பாரோர் புகழ்மல ரேயோ நிறைமதி
தானோ முகமது தாதா பசுபதி
பாகாய் முனம்வளை மேரோ குமிழ்சிமிழ்—கும்பமோடே

பூலோ கமதனில் வாதே செயவரு
கோடோ மணிதிகழ் வாரோ டழகுறு
பூணு னதுமுற னுை விதமுறு—சந்தமேலே

பூசா விளைஞர்கள் மாலே கொளவென
வேதா தரவரு சூதோ முலையது
பூவோ கரயது தோளோ களையிடை—மின்னல்தானே

வேலோ விருவிழி வாளோ கடுவலை
சோலோ கடலமு தாமோ வெருதினின்
மீதே வருநம னேயோ வடுவொடு—மம்புமானே

மீனர் கொடிமதன் றேரோ மதியுனும்
ராகோ கடிதடம் யாதோ வறிகிலம்
மேலோர் புகழ்குழல் காரோ யிருளற—லென்னுமானர்

மாலே தரவலை யாதே திருவுறு
போதா முனதிரு தாளே தருகுவை
மாதா தரவரு பாலா மயில்தனி—லுந்தும்வேலா

வானு டிறைதரு மானு ளுளமகிழ்
வோடே புணர்வுறு சேயே புலவர்கள்
வாழ்வே சிறுவயல் மீதே வளர்வுறு—கந்தவேளே.



## வலயப்பட்டித் திருப்புகழ்.

தான தன தத்த தன
தான தன தத்த தன
தான தன தத்த தன—தனதானு



மாமதி[illegible]
மோடுகட [illegible]
வாளயிலை யொத்தவிரு—விழியோடே

மாரன்மகு டத்தினொடு
ருதுவரை செப்பதனை
வாதுபுரி வட்டமுலை—யுறமானுர்
காமமதி னித்தமலை
யாமனுமை சத்திசிவ
காமிதரு புத்ரவரு—டருவாயே